14

# தனிவழிப்பாதைகள்

அவனுக்கும் அவளுக்கும் இடையே நேற்று நடந்த சண்டை புதிதில்லை. சமையல் செய்யும் அலமேலுவைக் கேட்டால் கதை கதையாகச் சொல்வாள். அவர்களது வாக்குவாதங்களைக் கடந்த பத்து வருஷங்களாகத் தினம் தினம் கேட்டு அலமேலுவுக்குப் பழகி விட்டது. சிலருக்கு வேலை செய்யும்போது கேட்டுப் பழகிவிடும் ரேடியோ சங்கீதம்போல.

எதனால் சண்டை ஆரம்பிக்கிறது என்று அவளுக்குப் புரியாது. தமிழர்களாக இருந்தாலும் அவர்கள் முக்காலும் ஆங்கிலத்திலேயே பேசுவதும், முக்கியமாகச் சண்டைக் காலத்தில் தமிழே கலக்காத ஆங்கிலத்தில் கத்துவதும் அலமேலுவுக்குப் பெரிய குறை.

இங்கு வந்த பிறகு திருமணத்தில் இருந்த கொஞ்ச நஞ்ச ஆசையும் அலமேலுவுக்குப் போய்விட்டது. இளம்பிள்ளை வாதத்தினால் ஒரு கால் சூம்பியிருக்கவில்லையானால் தனக்கும் எல்லாரையும் போல் கல்யாணமாகி குழந்தை குட்டிகள் பிறந் திருக்கும் என்று அவள் சில சமயங்களில் நினைத்துக் கொள்வாள். ஆனால் இங்கு வருவதற்கு முன்பே அவளுள் ஒரு வீம்பு ஏற்பட்டுப் போயிருந்தது: 'எவனுக்கும் நான் வேண்டாம்னா எனக்கும் ஒருத்தனும் வேண்டாம்.''

ஒரு வகையில் இந்த வீறாப்பு, மிகுந்த சுதந்திரத்தைக் கொடுத்தது. எந்த வம்பிலும் மாட்டிக் கொள்ளாமல் எட்டி நின்று உலகத்தை வேடிக்கை பார்க்க முடிந்தது. கிராமத்தில் புருஷன் பெண்ஜாதிச் சண்டைகளை அலமேலு நிறையப் பார்த்திருக்கிறாள். நாக்கில் நரம்பில்லாமல் சொல்லப்படும் வசவுகளில் கிட்டத்தட்ட ஓர் உற்சாகம் இருப்பதாகத் தோன்றும். விவஸ்தை இல்லாத ஜனங்க என்று சலிப்பு ஏற்படும். ஆனால் ஆங்கிலம் படித்தவர்கள், தில்லியில் ஆபீஸுக்குப் போகிறவர்கள், நாசூக்காக உடை உடுத்துபவர்கள் சண்டை போடுவார்கள் என்று தெரியாது.

ஐயோ! இவர்கள் பயங்கரமாகச் சண்டை போட்டார்கள். இவர்களது வாதப் பிரதிவாதங்கள் புரியாததால் யார்மேல் தப்பு என்று சொல்வது கடினம்.

'என்ன விஷயம் எதுக்கு இப்படி மாஞ்சு மாஞ்சு சண்டை போடறீங்க' என்று கேட்க வேண்டும் என அலமேலுவுக்குப் பதைக்கும். ஆனால் கேட்கத் தயக்கமாக இருக்கும். படிக்காத கிராமத்தானுக்குச் சளைக்காமல் இவர்கள் சண்டை போட்டாலும், இவர்களிடம் கொல்லென்று எல்லாரிடமும், முக்கியமாக ஒரு சமையல்காரியிடம் கொட்டிவிடும் சரளம் இல்லை. எல்லாவற்றையும் இறுகப் பூட்டி, தங்களுடைய உள்ளாடைகளில் பதுக்கிக் கொண்ட வர்கள் போல் வளைய வந்தார்கள். பெரிய வாக்குவாதம் நடந்து முடிந்திருக்கும். கூரை இடிந்து விழுந்து போன திகைப்புடன் அலமேலுவும் ஏழு வயது பப்புவும் பன்னிரண்டு வயது சுமியும் வளைய வருகையில் அவளும் அவனும் எதுவுமே நடக்காதது போல பளிச்சென்று அலங்காரம் செய்து கொண்டு அலுவலகத்திற்குக் கிளம்புவார்கள். இடையில் வரும் போன் கால்களுக்கு உற்சாகமாக பதில் சொல்வார்கள். எப்படித்தான் அப்படி ஒரு சிரிப்பு வருமோ - செப்புக்காசுகளைக் கொட்டியது போல அவள் கலகலவென்று சிரிப்பதைப் பார்த்தால் இதே வாய் பத்து நிமிஷங்களுக்கு முன் அனலைக் கக்கியது என்று சத்தியம் செய்தாலும் மறுமுனையில்

இருப்பவன் நம்ப மாட்டான். அவனும்தான் - எல்லார் முன்னிலையிலும் தண்ணென்று இருப்பான். சுலபமாகச் சிரிப்பான். அந்தச் சிரிப்பைப் பார்க்கும் போது ஆகா இவனைப் போல் உண்டா என்றிருக்கும். ஏகப்பட்ட சினேகிதர்கள் இருவருக்கும். நினைத்த போது, நேரம் காலம் பார்க்காமல் கதவைத் தட்டி உள்ளே வருவார்கள். உரிமையுடன் ''அலமேலு சாய் வேணும்'' என்பார்கள்.

அவளும் அவனும் அவர்களும் நடுக் கூடத்தில் விடிய விடிய சிரிக்க சிரிக்கப் பேசிக் கொண்டிருப்பார்கள். அலமேலுவுக்கு அலுப்பு வராது. ஆளைக் கண்ட சமுத்திரம் அவள். சிரித்த முகத்துடன் கோப்பைகளில் தேநீரை நிரப்புவாள்.

விருந்தினர்கள் கலைந்து அகன்றதும் மாயை விலகும். காலையில் மறுபடி தாட் பூட் சண்டை. ஈசுவரா! சேர்ந்து இருவரும் படுக்கும் கட்டிலில் ஏதானும் பூதம் இருக்கிறதா என்று அவளுக்குச் சந்தேகம். சத்தம் கேட்டு ஆடிக் காற்றில் நடுங்கும் துளிர் இலைகளைப் போல பப்புவும் சுமியும் மிரளுவது அவளுக்குப் புரியும்.

சில சமயங்களில் அந்த பாஷை புரியாத இரைச்சலைக் கேட்கும் போது உடம்பெல்லாம் ஜும்மென்று ஆகும். காளி கோவில் பூசாரிக்கு சாமி வருவதைப் போல உடம்பு ஆடும். அவள் கொல்லைக் கதவைத் திறந்து கொண்டு அங்கு கம்மென்று இருந்த பவளமல்லிகை மரத்தைப் பார்த்தபடி அமருவாள் - உள்ளே போரில் ஈடுபட்டிருக்கும் இருவரையும் யாராவது வேப்பிலை அடித்தால் நல்லது என்ற நினைப்புடன். இத்தனை பெரிய பட்டிணத்தில் பஞ்சாயத்து என்று ஒன்றும் இல்லாதது விசித்திரமாக இருந்தது.

ஊரில் இப்படித்தான் ஆறுமுக அண்ணாச்சியும் ரஞ்சிதம் அண்ணியும் பழி சண்டை போடுவார்கள். பிறந்த வீட்டுச் செல்லி ரஞ்சிதம். பார்க்க மூக்கும் முழியுமாக லட்சணமாக இருப்பாள். புருஷனுக்கு வகையாக ஆக்கிப் போடுவதை விட அக்கம் பக்கத்துச் சோதாப் பயல்களின் இளிப்புப் பேச்சை ரசித்துக் கொண்டு, நிற்பாள். 'ஊர் மேல மேயற கழுதை' என்று அவள் முடியைப் பிடித்து இழுத்து

அண்ணாச்சி அறைந்த அன்று ரோசத்துடன் பிறந்த வீடு சென்று விட்டாள். பஞ்சாயத்துக் கூடி சண்டையைத் தீர்த்து வைத்தது. ஆறுமுக அண்ணாச்சியை, 'வயக்காடே கதின்னு நாள் முழுக்கக் கிடந்தியானா உன் பெண்ஜாதி புத்தி பேதலிச்சுத்தான் போகும்' என்றது. 'கடைசி வரை உன் கூட இருக்கப்போறது உன் புருஷன்தான் என்கிறதனாலே அவனைப் பகைச்சுக்காம ஒத்துமையா இருக்கறதுக்கு என்னல்லாம் செய்யணுமோ, அதைச் செய்ய வேண்டியது உன் கடமை'ன்னு ரஞ்சிதத்திற்குப் புத்தி சொல்லிற்று. 'நா உசத்தி நீ உசத்தி என்கிற பேச்சு இங்க கூடாது. சேர்ந்து இழுக்க வேண்டிய வண்டி. நா என் வழி போறேன், நீ உன் வழி போன்னா வண்டி எதுக்கு?'

மந்திரம் போட்டது போல ரஞ்சிதம் ஆறுமுகத்திடம் திரும்பிச் சென்றது அலமேலுவுக்கு அதிசயமாகத்தான் இருந்தது. பஞ்சாயத்துத் தீர்ப்பை யாராலையும் எதிர்க்க முடியுமா என்று பொதுவாக எல்லாரும் சொன்னாலும், பிறந்த வீட்டிலே ரஞ்சிதத்துடைய அண்ணன்மார்கள் அவளை இருக்க ஒட்டல்லை என்றார்கள் பெண்கள்.

பட்டிணத்தில் அப்படிப்பட்ட மாயமெல்லாம் நிகழாது என்று அலமேலு சொல்லிக் கொண்டாள். இங்கு எடுத்துச் சொல்ல ஆள் இல்லை. கேட்டுக் கொள்ளவும் ஆள் இல்லை. இத்தனை சிநேகிதப் பட்டாளம் வருகிறதே, சிரித்துக் கும்மாளம் போடுகிறதே தவிர நல்லது பொல்லாது சொல்வதாகத் தெரியவில்லை.

நேற்று நடந்த சண்டை வழக்கத்தை விட பயங்கரமானது. நடு இரவில் வீட்டிற்குள் நுழைந்த அவன், படுக்கை அறைக்குச் சென்ற சிறிது நேரத்திற்குள் பூகம்பம் வெடித்தது. கண்ணாடி, பீங்கான் அழகுப் பொருள்களும் கோப்பைகளும் நொறுங்கி விழுந்தன. சாமான்களைப் பாழாக்குவதை விட அவளை இரண்டு மொத்து மொத்தியிருக்கலாம் என்று அலமேலு நினைத்துக் கொண்டாள். அது அர்த்தமுள்ளதாக இருந்திருக்கும் ஆறுமுக அண்ணாச்சி செய்த மாதிரி.

பப்புவும் சுமியும் விழித்துக் கொண்டு எழுந்து கதவோரம் நின்று பார்ப்பதை அலமேலுவால் தடுக்க முடியவில்லை. மனசு ஐயோ ஐயோ என்று பதைத்தது. யாருடைய நினைப்பும் இல்லாத வர்கள் போல் அவளும் அவனும் வாக்குவாதத்தில் ஈடுபட, கடைசியில் அவள், ''இனிமே சேர்ந்து வாழறதிலே அர்த்தமில்லே பிரியத்தான் வேணும்'' என்று தமிழில் நிதானமாக, மூர்க்கமான தீவிரத்துடன் சொன்னபோது, அலமேலு நடுங்கிப் போனாள்.

''போயேன்! போ!'' என்று அவன் உரக்கச் சொன்னான். ''நாய் ஜன்மம் போல வாழணும்னா போ. உனக்கும் எனக்கும் இனிமே சம்பந்தமிருக்கும்னு நினைச்சியா? போ!''

''நா எதுக்குப் போகணும்? இது எங்கப்பா எனக்குக் கொடுத்த வீடு. நீ தான் போகணும்.''

பாதங்களைத் தொட்டபடி நகர்ந்த நீரை உணர்ந்த அலமேலு, திடுக்கிட்டுக் குனிந்தாள். அவள் புடவைக் கொசுவத்தைப் பிடித்தபடி நின்றிருந்த பப்பு சிறுநீர் கழித்திருந்தான். அவளை நிமிர்ந்து பார்த்த வட்ட விழிகளில் பீதியும் சங்கடமும் தெரிந்தன. அதரங்கள் அவமானத்தில் மடிந்து கொண்டன. அவனது நிலையைக் கண்டு அதிர்ச்சி அடைந்தவள் போல் சுமி அவனையும் அலமேலுவையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''பரவாயில்லே வா. வேற ஜட்டி போட்டு விடறேன்'' என்று அலமேலு ரகசியக் குரலில் சொன்னாள். ஈரமாகியிருந்ததை அவிழ்த்து உடம்பைத் துடைத்து வேறு போட்டு, அவனைப் படுக்க வைத்தாள். தரையைத் துடைத்துத் துணியைக் கழிவறையில் அலசி உலர்த்திவிட்டு வரும்போது வீடு கப்சிப்பென்று இருந்தது. சண்டை போட்டவர்கள். வேறு வேறு இடத்தில் படுத்திருந்தார்கள். பப்புவும் சுமியும் கொட்டு கொட்டு என்று உத்திரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

யார் தூங்கினார்களோ என்னவோ அலமேலுவுக்குத் தூக்கம் வரவில்லை. இந்த மாதிரி ஒரு நாள் நடக்கப் போகிறது என்று அவளுக்குத் தெரியும். 'சேர்ந்து வாழறதிலே அர்த்தமில்லே.' இவர்கள் எப்படி சேர்ந்து வாழ்கிறார்கள் என்பது அவளுக்கு இந்தப் பத்து வருஷங்களாக ஆச்சரியமானதாக இருந்தாலும், இப்பொழுது அவர்கள் வாயிலிருந்து அது வெளிப்பட்ட போது, சுள்ளென்று கோபம் வந்தது. இரண்டு பேரும் கண்ணை இறுகப் பொத்திக்கிட்டுச் சின்னப் புள்ளைங்களாட்டம் பந்தாடினா எப்படி இருக்கும் அர்த்தம்? இலக்கு புரியாம ஆடற ஆட்டமில்லே அது?

அவன் தினமுமே இரவு பதினோரு மணிக்கு மேல்தான் வீட்டிற்கு வருவான். சில நாட்கள் நடுச்சாமத்துக்கு மேல் ஆகவும் ஆகும். குடிக்காத நாள் கிடையாது என்பது வாடையில் தெரியும். ஆனால் தரக்குறைவாக நடந்து கொண்டதில்லை. அதனால்தான் அலமேலு அவன் எப்பொழுது வந்தாலும் எழுந்து சாப்பாட்டை மேஜைமேல் வைப்பாள் - 'நீ எதுக்கு சாப்பாடு கொடுக்கறே' என்று மறுநாளைக்கு அவள் கோபித்துக் கொண்டாலும்.

நேற்று அவன் வரும்போதே மகாக் கோபத்துடன் வந்தான்.

அவளும் ஒன்றும் படிதாண்டாப் பத்தினி இல்லை. உற்சாகமானவள். வித விதமாக அலங்கரித்துக் கொண்டு அலுவலகத்துக்குச் செல்பவள். வீட்டையும் குழந்தைகளையும் பார்த்துக்கொள்ள அலமேலு இருக்கும் தைரியத்தில் சினேகிதர்களுடன் ஊர் சுற்றிவிட்டு இரவு எட்டு மணிக்கு மேல் வருவாள்.

தில்லிக்கு வந்த புதிதில் இதெல்லாம் அலமேலுவுக்கு விசித்திரமாக இருக்கும். ஆண்பிள்ளைதான் நேரங்கழிச்சு வரான்னா பொம்பளையுமா இப்படி என்று நினைப்பாள். பிறகுதான், அவர்களது தாட்பூட் சண்டைகளிலிருந்து புரிந்தது 'இதெல்லாம் போட்டா போட்டியிலே செய்ற வேலையாக இருக்கும்' என்று.

கிட்டத்தட்ட ரஞ்சிதத்தின் சுபாவம்தான் இவளுக்கும் என்று அலமேலுவுக்குத் தோன்றும். 'ரஞ்சிதம், நீ எம்மாங் அழகு' என்று ஆறுமுகம் சொல்லாததைச் சொல்லும் வட்டத்தினால் ரஞ்சிதம் ஈர்க்கப்பட்டதுபோல் இவளும் எந்தப் புகழ்ச்சி மழையைத் தேடியோ ஓடுகிறாள் என்று அலமேலு நினைத்துக் கொள்வாள். அதனால்தான் அத்தனை நண்பர்கள். 'ஓ, நீ இப்படி. ஓ நீ அப்படி - நைஸ் நைஸ் வெரி நைஸ்.' நைஸ் என்பது ஒரு போதை என்று அலமேலுவுக்குத் தெரியும்.

இரண்டு மாதங்களுக்கு முன்பு அவள் ஒரு புதிய ஆணுடன் வந்து நடுக்கூடத்தில் அமர்ந்து "அலமேலு, சாயா கொண்டா" என்றபோது அவளிடம் ஒரு மாறுதல் ஏற்பட்டிருந்ததை அலமேலு கவனித்தாள். முகம் பிரகாசமாக இருந்தது. கண்களில் பதினாறு வயதுப் பெண்ணின் துள்ளல் தெரிந்தது.

இன்னிக்கு என்ன புதுசா சந்தோஷம் என்ற வியப்புடன் அலமேலு சாயாவுடன் சென்றபோது அவளும் அந்த ஆளும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்ததில் தெரிந்த நெருக்கம் சொரேல் என்று அடி வயிற்றில் சங்கடத்தை ஏற்படுத்திற்று. சமையலறைக்குத் திரும்பியதும் ஊர் ஞாபகத்தில் 'அடியே இது நல்லதுக்கில்லே' என்று சொல்லிக் கொண்டாள். யார் என்ன சொல்லக்கிடக்கு என்கிற அலட்சியத்துடன் அவள் தினமும் நேரம் கெட்ட நேரம் அந்த ஆசாமியுடன் வெளியில் போய் வந்து கொண்டிருந்தாள்.

அதனால்தான் நேற்று இரவு வீடு வந்து சேர்ந்ததும் அவன் அப்படி ஒரு ரௌத்திர தாண்டவம் ஆடின போது ஆச்சரியமாக இருக்கவில்லை. "நா நினைச்சேன்" என்று பெருமூச்சு வந்தது. எல்லா இடத்திலும் ஆண் பெண் உறவு என்பது ஒண்ணுதான் என்று தோன்றிற்று. படித்த இவளும் படிக்காத ரஞ்சிதமும் ஒரே தளத்தில் நிற்பதுபோல் இருந்தது. இரவு முழுவதும் அவள் கேட்ட கேள்வி குடைந்தது. "நீ எதுக்கு என்னைக் கேள்வி கேட்கிறே? நீ கண்ட சமயத்துக்கு வீட்டுக்கு வரும்போது நா கேள்வி கேட்டேனா? உன் சினேகிதிகளைப் பத்தி விசாரிச்சேனா?"

அவ கேட்டதிலே நியாயம் இருக்கு என்று கடைசியில் அலமேலு சொல்லிக் கொண்டாள். நல்லாக் கேளு. "நீ செஞ்சா சரி நா செஞ்சா தப்பா? இனி உன் பாதை தனி என்னுது தனி!"

அலமேலுவுக்குத் தூக்கம் வரவில்லை. எல்லாம் சரிதான். ஆனா வண்டி ஒண்ணு இருக்கில்லே இழுக்க? அதிலே ரெண்டு அறியாப் பிள்ளைங்க உட்கார்ந்திருக்கில்லே? எந்தப் பாதையிலே ஓட்டிப் போவீங்க? எது சரி எது தப்பு?

காலையில் கண்விழித்ததும், இரவு முழுவதும் குழம்பித் தவித்தது தான் மட்டும் தான் என்று அலமேலுவுக்குப் புரிந்தது.

தானாகவே காபி போட்டுக் குடித்து, அவள் முட முடத்த கஞ்சிபோட்ட புடவையில் எங்கேயோ வெளியேறினாள். அவன் நாஷ்டா சாப்பிடாமல் அலுவலகத்துக்குக் கிளம்பினான். அலமேலு வழக்கம் போல் குழந்தைகளைத் தயார் செய்து பள்ளிக்கு அனுப்பினாள்.

அவள் வீடு திரும்பியபோது முகம் வாடியிருந்தாலும் உற்சாகமாகவே காணப்பட்டாள். தோழிகள் வந்தார்கள். தனது கதையை அவள் விவரித்துக் கொண்டு போக அவனது மிருகத் தனமான கோபத்தை எடுத்துச் சொல்ல, தோழிகள் ஒரு மனதாகச் சொன்னார்கள். "இனிமே சேர்ந்து இருக்கறதிலே அர்த்தமில்லே."

"அதனாலேதான் இன்னிக்கு வக்கீலைப் பார்த்திட்டு வர்றேன்" என்றாள் அவள். "சட்டப்படி பிரிஞ்சாத்தான் எல்லாத்துக்கும் நல்லது."

சினேகிதக் கும்பலைக் கண்டதும் தானாக உற்சாகமாகத் தேநீர் தயாரிக்கும் அலமேலு இன்று கொல்லைப் படிகளில் அமர்ந்து பவளமல்லிகை மரத்தை வேடிக்கை பார்த்தாள். 'அலமேலு அலமேலு' என்ற அவள் கூப்பிட்டது காதில் விழாதது போல் அமர்ந்திருந்தாள்.

குழந்தைகள் பள்ளியிலிருந்து திரும்பி 'அலமேலு அலமேலு' என்று கூப்பிட்டதும் உயிர் வந்தமாதிரி எழுந்து அவர்களுக்குச் சோறு போட்டாள்.

மாலையில் அவனுடைய சிநேகிதர்கள் வந்தார்கள். அவன் ஆவேசத்துடன் அவளைப் பற்றிப் புகார் செய்தான். அதில் இது நாள் வரை புலப்படாத வெறுப்பு துவனித்தது - பரம வைரியைப் பற்றிப் பேசுவது போல. எல்லாரும் சொன்னார்கள். ''இனிமே சேர்ந்து இருக்கிறதிலே அர்த்தமில்லே.''

''சட்டப்படி பிரிஞ்சுட்டாப் போவுது'' என்றான் அவன் எகத்தாளதமாக. ''அவ எவனை வேணும்னாலும் கல்யாணம் செய்துக்கலாம்.''

''செய்துப்பேன். நா சன்யாசினியில்லே'' என்று அவள் சிரித்தாள்.

பப்புவும் சுமியும் தங்கள் அறையில் டீ.வி.யின் முன் பதுங்கி இருந்தார்கள்.

நேற்று வரை வீட்டின் எஜமானனைப் போல் வளைய வந்தவன் இப்போது அன்னியனாய், குழந்தைகளுடன் கூடப் பேசத் தோன்றாமல் இரண்டு நாட்கள் வளைய வந்தான். மூன்றாம் நாள் ஒரு சின்னப் பையில் தனது உடுப்புகளைத் திணித்துக் கொண்டு வெளியேறினான். அலமேலுவுக்கு அழுகை வந்தது. போகாதீங்க என்று தடுக்க வேண்டும் போல் இருந்தது.

அவள் வழக்கம் போல் அலுவலகத்துக்குச் சென்றாள். மாலை நேரங்களில் வக்கீல் வீட்டிற்குச் செல்லுவது வழக்கமாகிப் போயிற்று. துணைக்கு அவளுடைய சிநேகிதன் சென்றானா என்று அலமேலுவுக்குத் தெரியாது. அலமேலுவுக்கு எல்லாம் அலுத்துப் போயிற்று. சட்டு புட்டுனு ஏதானும் முடிவாகி, அந்தப் புது ஆளு வீட்டுக்குள்ளே நுழையறதுக்குள்ளே நான் கிளம்பிப் போறேன், என்று சொல்லிக் கொண்டாள். 'அவங்களே வீட்டைப் பார்த்துக்கட்டும்.'

அன்று மாலை அலமேலு அவளைக் கேட்டாள்.

''இன்னும் எத்தனை நாள் ஆகும்?''

''எது?'' என்றாள் அவள் திடுக்கிட்டு.

''அதான், இந்தக் கோர்ட்டு கச்சேரி சமாசாரமெல்லாம்.''

அவள் சோர்வுடன் சொன்னாள். ''ரொம்ப நாள் ஆகும்.''

''வக்கீல் ஐயா என்ன சொல்லுறாங்க?''

''ஐயா இல்லே. அம்மா. பெண்ணுக்குத்தான் பெண்ணைப் புரிஞ்சுக்க முடியும். ஆண் வக்கீல்னா ஏன் பிரியணும்பாங்க. விவாகரத்து வாங்கறதிலே இப்ப வக்கீல் அம்மா என்னை விடத் தீவிரமா இருக்காங்க.''

''குழந்தைங்க?''

அவளுடைய முகம் இலேசாக இருண்டது. ''யாருக்கு யார்கிட்ட இருக்கணும்னு விருப்பமோ இருந்துக்கட்டும். அதைக் குழந்தைகளே தீர்மானிச்சுக்கட்டும்.''

பப்பு அன்று நின்ற இடத்தில் சிறுநீர் கழித்ததைச் சொல்லலாமா என்று யோசித்து அலமேலு மௌனமாக நின்றாள்.

அவள் திடீரென்று முகத்தைக் கைகளால் பொத்திக்கொண்டு அழ ஆரம்பித்தாள். அலமேலு திகைப்புடன் பார்த்தாள். பாவமாக இருந்தது.

''விலகறது கஷ்டம்தான்'' என்றாள் மெல்ல. ''யோசிச்சு முடிவு செய்யுங்கக்கா.''

அவள் சடக்கென்று நிமிர்ந்தாள். ''இப்ப யோசிக்க என்ன இருக்கு?'' என்றாள் கோபத்துடன். ''இனிமே என் தீர்மானத்தை மாத்திக்க முடியாது. தனியாப் போராடணும்னா போராடிட்டுப் போறேன்.'' இதைச் சொல்லும்போது மீண்டும் கண்களில் நீர் துளித்தது.

அழுகையின் காரணம் அலமேலுவுக்குப் பின்னால் புரிந்தது.

அவளுடைய சினேகிதன் பிறகு தலையே காட்டவில்லை.

இப்பொழுதெல்லாம் பவளமல்லிகை மரத்தின் முன் பிரமைபிடித்தவள் போல் அமர்ந்திருக்கும் போது நாவிலிருந்து 'அடிப்பாவி, அடிப்பாவி' என்று வெளிப்படும் பிரலாபம் யாரை குறித்தது என்று அலமேலுவுக்கு விளங்கவில்லை. ஆனால் அண்ட சராசரம் முழுவதும் வியாபித்திருக்கும் ரஞ்சிதங்களுக்காக மனசு அழுவது போலிருந்தது.

கல்கி பொன்விழா மலர் 1992

